



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
28—1—1968


# கிராம, நகரப் பகுதிகளிலும் குடி நீர் சப்ளை

நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, மக்களுக்கு குடி நீர் சப்ளை செய்வதற்காகவும், போதிய இதர சுகாதார வசதிகளை அளிப்பதற்காகவும் ராஜ்ய அரசாங்கங்கள் பல திட்டங்களை மேற்கொண்டன. திட்டங்கள் மூலமாக ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்றாலும், பொதுவாக திட்டங்களுக்குத் தேவைப்பட்ட நிதி வசதியையோ, சாதனங்களையோ திரட்ட ராஜ்ய அரசாங்கங்கள் சிரமப்பட்டன. ஆகையால், ராஜ்ய அரசாங்கங்கள் குடி நீர் சப்ளை, சுகாதார வசதிகள் ஆகியவற்றுக்கான திட்டங்களை நிறைவேற்றுவதற்காக மத்திய அரசாங்கம் கூடுதலாக நிதி உதவி அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டன.

இதற்கிணங்க 1954-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் மத்திய சுகாதார இலாகா, குடி நீர் சப்ளை, சுகாதார வசதிகள் ஆகியவற்றுகான தேசீய திட்டமொன்றை வகுத்து, அத்திட்டப்படி ராஜ்யங்களுக்கு நிதி உதவி அளிக்க வசதி செய்தது. அனுமதிக்கப்பட்ட நகர்ப்புற திட்டங்களுக்கு கடனுதவி வழங்கப்பட்டது. கிராமப்புறத் திட்டங்களுக்கு 50 சதவிகிதம் வரை மத்திய அரசாங்கம் மானியஉதவி அளித்தது. மிகுதியை ராஜ்ய அரசாங்கங்கள் ஓரளவு மான்யமாகவும், கிராம வாசிகளிடமிருந்து ஓரளவு வசூலித்தும் ஏற்றுக்கொண்டன.

அமெரிக்காவின் தொழில் நுட்பக்கூட்டுறவுக்காக வழங்கிய ரூ. 3 கோடி உதவியுடன் இந்த தேசீய திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. சாதனங்களையும், தொழில்நுட்ப உதவியையும் இந்த அமெரிக்க ஸ்தாபனம் வழங்கியது.

நகரப் பகுதிகளுக்கான குடி நீர் சப்ளை-சுகாதார வசதிகள் திட்டத்திற்காக முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ரூ. 184 கோடி செலவில் ஆயிரத்திற்குமேற்பட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டன. இத்திட்டங்களுக்காக மத்திய அரசாங்கம் சுமார் 145 கோடி உதவியாக வழங்கியது.

கடந்த இருபதாண்டுகளில் ஏற்பட்ட ஜனத்தொகைப் பெருக்கத்தினால், இருந்த குடி நீர் வசதியும், சாக்கடை வசதியும் அளவுக்குமீறி உபயோகப்படுத்தப்பட்டன. ஜனத்தொகைப் பெருக்கத்திற்கேற்ப இந்த அடிப்படைவசதிகள் பெருகவில்லை.

1961-ம் வருடத்தியசென்ஸஸ்படி நகர்ப்புற மக்களில் 34 சதவிகிதத்தினருக்குத்தான் போதுமான குடி நீர் சப்ளை கிடைத்தது என்றும், 21 சதவிகிதத்தினருக்குசாக்கடை வசதிகள் கிட்டின என்றும் தெரிகிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குப்பிறகு நகர்ப்புற மக்களில் 48 சதவிகிதத்தினக்கு குடி நீர் சப்ளை கிடைத்திருக்கக்கூடும் என்றும், 24 சதவிகிதத்தினக்கு சாக்கடை வசதிகள் கிடைத்திருக்கும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

நகர்ப்புறப் பகுதிகளில் போதுமான குடி நீர் சப்ளை வசதிகளை அமைப்பதற்கும், இதர சுகாதார வசதிகளை ஏற்படுத்துவதற்கும் சுமார் ரூ. 1000 கோடி தேவைப்படலாம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

கிராமப் பகுதிகளுக்காக முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டகாலத்தில்சுமார்ரூ. 45 கோடி செலவில் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டன. இத்திட்டங்களுக்காக மத்திய அரசாங்கம் மொத்த செலவில் 50 சதவிகிதம் வரை உதவி அளித்தது.

இன்னும்பலகிராமங்களில் நல்ல குடி நீர் வசதி இல்லை. குளங்கள், ஆறுகள் ஆகிவற்றையே அவர்கள் இன்னும் நம்பியிருக்கிறார்கள். கிராமங்களில் உள்ள குடி நீர் பிரச்னையை இரு பிரிவுகளாகக் கருதலாம். ஆறுகள், குளங்கள், முதலியவை இருந்து போதுமான ஜலவசதியுள்ள இடங்களில் நல்ல குடி நீர் சப்ளை செய்வது என்பதும், ஜலவசதி பற்றுக்குறைஇருக்கும் இடங்களில்குடி நீர் வசதிக்கு ஏற்பாடு செய்வது என்பதும் பிரச்னையின் இரு பகுதிகளாக எடுத்துக்கொள்ளலாம். மூன்றாவது திட்ட காலத்தில் ஜல வசதி பற்றிய விசேஷ ஆய்வுப் பிரிவுகள் அமைக்கப்பட்டன. ஜல வசதி பற்றுக்குறையால் பாதிக்கப்பட்ட இடங்களில் பூர்வாங்கசர்வே ஒன்று நடத்தப்பட்டது. பற்றுக்குறை உள்ள இடங்களில் குடி நீர் சப்ளை செய்வதற்காக சுமார் 600 கோடிரூபாய் தேவைப்படலாம். என்றுசர்வே மதிப்பிட்டிருக்கிறது இது தவிர, ஜலவசதி உள்ள இடங்களில் குடி நீர் சப்ளைசெய்வதற்காக ரூ. 132 கோடி தேவைப்படலாம் என்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

டில்லி, பம்பாய், சென்னை, பங்களூர், கல்கத்தா ஆகிய நகரங்களுக்கான குடி நீர் சப்ளை, சாக்கடை வசதி திட்டங்களுக்கு வரும் ஆண்டுகளில் விசேஷ முக்கியத்துவம் அளிக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது.

பம்பாயிலுள்ள பட்ஸாயி குடிநீர் சப்ளை திட்டத்திற்காக ரூ. 67·30 கோடி செலவாகக்கூடும். பெங்களூருக்கான குடி நீர் சப்ளை, சாக்கடை வசதி திட்டங்களுக்காக ரூ. 38 கோடி செலவாகும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டம் உலக பாங்கி உதவியுடன் நிறைவேற்றப்படும்.

சென்னை நகரத்திற்கான குடிநீர் சப்ளையை அதிகரிப்

[ ௪-ம் பக்கம் பார்க்க ]

# சமூக நல பாதுகாப்பை நோக்கி ...

இந்தியா சுதந்திரமடைந்த பிறகு சமூகநலப் பாதுகாப்புக்கான திட்டங்களை அரசாங்கம் வகுத்து நிறைவேற்றி வருகிறது. வேலைவாய்ப்பு கிடைக்காததாலும், முதிய வயதிலும், உடல் நலிவுற்று இருக்கும்போதும், உடல் ஊனமடைந்ததாலும் அரசாங்கத்தின் உதவியைப் பெறுவதற்கான உரிமையை மக்களுக்கு அளிக்க அரசாங்கம் முயலவேண்டும் என்று அரசியல் சாசனத்தில் உள்ள கொள்கைகள் பற்றிய கோட்பாடுகள் கூறுகின்றன. சமூக நல உதவிபற்றிய எல்லா விஷயங்களும் இந்தக் கோட்பாடுகளில் காணப்படுகின்றன. வருமானமின்மை அல்லது வருமானக்குறைவு ஏற்படக்கூடிய எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் சமாளிப்பதற்கு ஊழியர்களுக்கு உதவுவதே சமூக நல நடவடிக்கைகளின் முக்கிய குறிக்கோளாகும்.

சுதந்திரத்திற்கு முன் இவ்வித அனுகூலங்களை அளிப்பதற்கான சட்டங்கள் அனேகமாக இல்லையென்றே கூறலாம். ஒரு சில ராஜ்யங்களில் மட்டும் தொழிலாளர்களுக்கான நஷ்டஈடு சட்டமும், தாய்மைக்கால அனுகூல சட்டமும் இருந்தன.

ஆனால், 1947-க்குப் பிறகு தொழிலாளர் நலனுக்கான பல சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. தொழிலாளர்களுக்கான அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் சட்டமும், நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதி-போனஸ் திட்டங்களுக்கான சட்டமும் 1948-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டன. அதற்குப் பிறகு 1951—ஆம் வருடத்திய தோட்டத் தொழிலாளர்களுக்கான சட்டமும், அதே வருடத்திய நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் க்ஷேம நிதிச் சட்டமும், 1952—ஆம் வருடத்திய தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதிச் சட்டமும், 1955—ஆம் வருடத்திய அஸ்ஸாம் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதித் திட்டச் சட்டமும், 1961-ஆம் வருடத்திய தாய்மைக்கால அனுகூலச் சட்டமும், 1966-ஆம் வருடத்திய மாலுமிகளுக்கான பிராவிடென்ட் நிதிச் சட்டமும் நிறைவேற்றப்பட்டன.

தொழிலாளர்களுக்கான அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டம் தென்கிழக்கு ஆசியாவிலேயே முதலாவதாக எடுக்கப்பட்ட ஒரு புதிய நடவடிக்கையாகும். ஜம்மு-கஷ்மீர் தவிர, இந்தியாவின் எல்லா பகுதிகளிலும் இந்தச் சட்டம் அமலில் இருக்கிறது. இருபது அல்லது அதற்கு அதிகமான ஊழியர்கள் உள்ள தொழிற்சாலைகள் விஷயத்தில் இந்த இன்ஷ்யூரன்ஸ் சட்டம் பொருந்தும். எந்தத் தொழில்துறை, வர்த்தக விவசாய நிறுவனத்திற்கும் இச்சட்டத்தை விஸ்தரிக்கலாம். இந்த கட்டாய இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தின் கீழ் வரும் எல்லா ஊழியர்களும் இன்ஷ்யூர் செய்யப்பட வேண்டும்.

உடல்நலிவு, வேலைசெய்யும்போது ஏற்படும் காயம் முதலியவற்றால் ஊழியர்கள் பாதிக்கப்படும்போது இத்திட்டம் தகுந்த பாதுகாப்பு அளிக்கிறது. தாய்மை காலத்தின்போதும் இன்ஷ்யூர் செய்துகொண்டுள்ள பெண்களுக்கு இத்திட்டம் உதவிபுரிகிறது. இத்திட்டப்படி இன்ஷ்யூர் செய்துகொண்டுள்ள ஊழியரின் குடும்பத்திற்கும் மருத்துவ வசதி கிடைக்கும். வேலைசெய்துகொண்டிருக்கும் பொழுது ஏற்பட்ட காயத்தாலோ விபத்தாலோ மரணமடையும் ஊழியரின் குடும்பத்திற்கு உதவியும் இத்திட்டத்தின்மூலம் கிடைக்கிறது.

சென்ற ஆண்டு அக்டோபர் மாத இறுதிவரை இத்திட்டத்தின்கீழ் 35.5 லட்சம் பேர்கள் கொண்டுவரப்பட்டிருக்கிறார்கள். இன்ஷ்யூர் செய்துகொண்டுள்ளவர், அவரது குடும்பம் ஆகிய அனைவரையும் சேர்த்துப் பார்த்தால் மொத்தம் 1.31 கோடி மக்கள் இத்திட்டத்தால் பயனடைகிறார்கள்.

இத்திட்டத்தின்கீழ் 573 சிகிச்சை நிலையங்களும், 32 ஆஸ்பத்திரிகளும் இருக்கின்றன. இவற்றில் நோயாளிகளுக்காக 5,666 படுக்கைகள் இருக்கின்றன.

நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதி — போனஸ் திட்டச் சட்டம் 1948-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது. இந்திய சமூகநல பாதுகாப்பு சரித்திரத்தில் இது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்காக சுரங்க அதிபர்களும் செலுத்தும் கட்டாய பிராவிடென்ட் நிதிக் கொள்கையை வரையறுப்பதற்கு இச்சட்டம் மிகவும் உதவியாக இருந்தது. இந்த திட்டம் முதலில் மேற்கு வங்காளத்திலும், பிஹாரிலும் அமல் செய்யப்பட்டது. பிஹார், மேற்கு வங்காளம், மத்தியப் பிரதேஷ், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், ஆந்திரப் பிரதேஷ், ராஜஸ்தான், மகாராஷ்டிரம், தமிழ்நாடு, நாகாலன்ட் ஆகிய இடங்களில் தற்போது இத்திட்டம் அமலில் இருக்கிறது. சுரங்க ஊழியர்கள் ஓய்வுபெறும் போதும், வேலையிலிருந்து நீக்கப்படும்போதும், உடல் ஊனத்தாலோ, வேறு காரணத்தாலோ வேலை செய்ய முடியாமல் போகும் போதும் ரொக்க உதவி அளிப்பதற்கும் இத்திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது. இத்திட்டத்தின்கீழ் 1965-66-ல் 4,38,565 ஊழியர்கள் கொண்டுவரப்பட்டிருந்தார்கள். இத்திட்டத்தின்கீழ் கொண்டுவரப்பட்டிருந்த நிலக்கரிச் சுரங்கங்கள், துணை அமைப்புகள் ஆகியவற்றின் எண்ணிக்கை 1948-ல் 958 ஆக இருந்தது 1967-ல் 1,300 ஆக உயர்ந்தது.

நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதித் திட்டத்தின் அனுகூலங்களை, மற்ற தொழில்துறையில் உள்ள ஊழியர்களுக்கும் கிடைக்குமாறு செய்வதற்காக, 1952-ல் தொழிலாளர்களுக்கான பிராவிடென்ட் நிதிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. முதலில் சிமென்ட்,

[ 8-ம் பக்கம் பார்க்க ]

சர்வசமய சமநோக்கிற்கு வழிவகுத்த

# மகான் கபீர்

கபீருடைய மரணத்தைப் பற்றிய ஓர் அழகான கதையை அனைவரும் அறிவர். அவருடைய உடலை தகனம் செய்ய வேண்டும் என்று ஹிந்துக்களும், அடக்கம் செய்ய வேண்டுமென முஸ்லீம்களும் சண்டையிட்டார்கள். உடல் இருந்த இடத்தில் ஒரு மலர்க்குவியல் இருப்பதைக்கண்டு இருசமயத்தாரும் வியந்தனர். அதில் ஒருபாதியை முஸ்லீம்கள் கோரக்புரில் அடக்கம் செய்தனர்; மற்றொரு பாதியை தகனம் செய்வதற்காக ஹிந்துக்கள் காசிக்கு எடுத்துச் சென்றார்கள்.

இரண்டு மாபெரும் சமயங்களில் கோட்பாடுகளைச் சிறப்புறச் செய்த ஒரு மகானுக்கு ஏற்ற முடிவுதான் அது என்று கூறப்பட்டிருக்கிறது.

கடவுள் பக்திதான் முக்கியமானதேயன்றி சமயம் அல்ல என்பதை நம்பிய மாபெரும் ஞானிகளில் கபீரும் ஒருவர். அல்லாவைப்பற்றியும் ராமனைப் பற்றியும் அவர் ஒரே மாதிரியான உத்வேகத்துடனேயே பேசினார். ஆதம், ஏவை பற்றியும் அவர் அடிக்கடி குறிப்பிட்டு வந்தார். சடங்குகளுக்கும் ஆடம்பரத்துக்கும் முக்கியத்துவம் அளிக்கும் சமயத்தை அவர் தள்ளி வைத்தார். அவர் இவ்வாறு பாடினார்:-

உன்னிடம் இருப்பவன்
ஒரே இறைவன்
அவனை நீ பற்றியிருப்பது
சிந்தனையால் அல்ல.
படிப்பாலும், ஆய்வினாலும்
அடையும் பயன் ஒன்றில்லை,
மூடனே,
அவனை நீ உன் இதயத்தில்
போற்று விட்டால்!
இதயத்தில் வஞ்சகத்துடனும்
இறைவனை வணங்குகிறாய், புனித
யாத்திரையால் உனக்கு
என்ன புண்ணியமோ?

கபீரின் முறைமை என்றழைக்கப்படுவது, ஜாதி முறைக்கு அப்பாற்பட்டது. சகோதர அன்பிலே சேருகிறவன், ஜாதிபற்றி எல்லா விருப்பு வெறுப்புகளையும் விட்டொழிக்கிறான். கீழ்ச் சாதியினருக்கு இந்த முறைமையில் கதவு எப்போதும் திறந்திருந்தது. இந்து சமயத்தில் இருந்த இத்தகையோரின் கஷ்டங்களைப் போக்குவதற்கு கபீர் ஆற்றிய பணிகள் எத்தனையோ!

ஜாதியும் சடங்குகளும் அர்த்தமற்றவையாக கபீருக்குத் தோன்றின. அவர் கூறுகிறார்:—

'பணியாளனே, எங்கு என்னை நாடுகிறாய்? நான் காபாவிலும் இல்லை; கயிலாயத்திலும் இல்லை; நான் சடங்கிலும் இல்லை; யோகத்திலும் துறவியிலும் இல்லை, உண்மையிலேயே நீ என்னை நாடுவதாய் இருந்தால், என்னை உடனேயே காண்பாய், கணநேரத்தில் என்னைச் சந்திப்பாய்.' ('எல்லா மூச்சுக்கும் மூச்சு இறைவன்' என்று கபீர் கூறுகிறார்.)

ஒரு பாடலில், கபீர் இந்துக்களையும், முஸ்லீம்களையும் பரிகசிக்கிறார். மசூதிக்குள் கடவுள் இருந்தால், பின் உலகம் யாரைச் சேர்ந்தது? உனது புனித யாத்திரையில் நீ காணும் உருவத்துக்குள் ராமன் இருக்கிறான் என்றால், வெளியே என்ன நடக்கிறது என்பதை அறிபவர் யார்? கிழக்கிலே ஹரி இருக்கிறார், மேற்கிலே அல்லா இருக்கிறார். உங்கள் இதயத்துக்குள்ளே பாருங்கள். அங்கு கரீம், ராம் இருவரையும் காண்பீர்கள். உலகிலுள்ள எல்லா ஆணும் பெண்ணும் அவருடைய வாழும் உருவங்களே. (தாம் அல்லாவின் குழந்தை என்றும், ராமனின் குழந்தை என்றும் கபீர் கூறுகிறார். 'அவர் எனது குரு, அவர் எனது பீர்' என்கிறார்.)

ஆயினும், கபீருக்குத் துறவறமும் பிடிக்கவில்லை. இந்து மதத்தின் வெளிச் சடங்குகளை அவர் கண்டித்ததனால், தீவிர இந்துக்கள் அவர் மீது விரோதம்கொண்டதில் வியப்பில்லை. அதே போன்று முஸ்லிம்களின் சடங்குகளையும் அவர் ஆதரிக்கவில்லை.

"வம்பிலும் பூசலிலும்
எப்போதும் மூழ்கி,
அறிவு பெறும் வாய்ப்பை
இழந்து விட்டாய்;
"வீண் செயலை
விட்டு விட்டு
ராமனை நினைப்பாய்,
மூட மனமே!"

எல்லாச் சமய பிரிவுக்குப் சாதிசமயத் தடைகள் அற்று ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவை. இவ்வாறு கபீர் கருதினார்.

---

[ 1-ம் பக்கத்தொடர்ச்சி ]

பதற்காக தமிழக அரசாங்கம் சில திட்டங்களை பரிசீலனை செய்து வருகிறது. காவிரி, பெண்ணாறு ஆகிய நதிகளிலிருந்து சென்னை நகரத்திற்குத்தேவையான குடிநீரைக் கொண்டுவருவது என்பது இத்திட்டங்களில் சிலவாகும்.

கல்கத்தாவில் குடிநீர் சப்ளை திட்டங்களுக்காகவும், கல்கத்தா எரிவாயு சப்ளை திட்டத்திற்காகவும் மேற்கு வங்காள அரசாங்கத்திற்கு ரூ. 83.99 லட்சம் கடனுதவியாக வழங்கப்பட்டிருக்கிறது.

கிராமப்பகுதிகளிலும், நகரப் பகுதிகளிலும் காலரா, யானைக்கால்நோய், முதலியவற்றை அறவே ஒழிப்பதற்குத்தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்பதும், ஜலவசதி பற்றாக்குறையாக இருக்கும் கிராமங்களில் குடிநீர் வசதியை அமைப்பதற்கு முதல் முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பதும் வருங்காலத் திட்டங்களின் அடிப்படைக் குறிக்கோள்களாக இருக்கும். கிராமப்பகுதிகளில் சாதாரண கிணறுகள் வெட்டும் வேலை தொடர்ந்து நடைபெறும். ஜன நெருக்கம் உள்ள நகரப் பகுதிகளில் குடிநீர் சப்ளை வசதிகளையும் சாக்கடை வசதிகளையும் விஸ்தரிப்பதில் முக்கிய கவனம் செலுத்தப்படும்.

பொதுவாக நோக்கும்போது குடிநீர் வசதிக் காட்டிலும், சாக்கடை வசதி மிகவும் குறைவாகவே இருக்கிறது. சாக்கடை வசதித் திட்டங்களை முனிசிபல்சபைகளும், ஸ்தல ஸ்தாபனங்களும் மேற்கொள்வதற்கு ஊக்கமளிக்கப்படுகிறதுசாக்கடை வசதி திட்டங்களுக்காக மத்திய அரசாங்கமும், ராஜ்ய அரசாங்கங்களும் சேர்ந்து செலவில் 25 சதவிகிதம் மானியமாக அளிப்பதென்றும் 75 சதவிகிதத்தை கடனாகக் கொடுப்பதென்றும் முடிவு செய்திருக்கின்றன.

---





| | | |
|---|---|---|
| ஆண்டு : 33 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1968 |
| இதழ் : 10 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜனவரி: 28 |


# விரிசல் தெரிகிறது

அகிலபாரதம் என்ற அமைப்பில் ஒட்டைச் சத்தம் கேட்டுக்கொண்டே வந்து இலேசாக விரிசல் தெரியத் தொடங்குகிறது. மொழி பற்றிய தமிழகச் சட்டமன்றத் தீர்மானத்தின் பொருள் இதுதான்.

நாட்டைப் பிரிக்கவேண்டும், தனியாகத் திராவிடநாடு பிரியவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள் திடீரெனப் பிரிவினைக் கோரிக்கையை விட்டுவிட்டோம் என்று அறிவித்து அகிலபாரத அமைப்பில் ஒரு அங்கமாகத் தமிழ் நாட்டை ஆளும் உரிமையை வேட்டுத் தேர்தலுக்கு நின்று பதவிக்கும் வந்தாயிற்று.

"பார்த்தீர்களா, தங்கள் அடிப்படைக் கொள்கையையே விட்டு விட்ட இவர்களுக்கு உண்மையில் ஒரு கொள்கையும் கிடையாது. கொள்கையற்ற இவர்கள் பதவிக்கு வந்து என்ன சாதிக்கப் போகிறார்கள்?" என்று வாக்காளர்களிடம் எடுத்துச் சொல்லி எவ்வளவோ விளக்கியும் பொதுமக்கள் தீர்ப்பு பிரிவினை வாதிகளுக்கு உதவியாக இருந்துவிட்டது.

இப்பொழுதும் தமிழக அரசினர் தங்களுக்குப் பிரிவினை நோக்கம் கிடையாதென்றே கூறுகின்றனர். ஆயினும் சட்டமன்றத்தில் நிறைவேறியுள்ள தீர்மானம் மொழியின் பேரால் பிரிவினைக்கு வேண்டிய விரிசலை உண்டாக்கியிருக்கிறது. மத்திய அரசில் இருப்பவர்களே தமிழ்நாடு பிரிந்து செல்வதற்கான சூழ்நிலையையும் அவசியத்தையும் உண்டாக்கி விட்டார்கள் என்று வரலாறு ஏற்றுக்கொள்ளும் முறையில் சட்டபூர்வமாகவும் அரசியல் தந்திரத்துடனும் பிரிவினைக்கான திட்டங்கள் புகுத்தப்படுகின்றன. தமிழ் நாட்டில் அவர்களுக்குக் கிடைத்துள்ள ஆட்சி வாய்ப்பு இதற்கு ஏற்றதாகப் பயன்பட்டு வருகிறது.

மொழி விவகாரத்தில் தமிழ்நாட்டு உணர்ச்சியை தர்க்க வாதங்களால் புறங்கண்டு விடலாமென்று எண்ணுகின்றவர்களின் ஆதிக்கம் காங்கிரஸிலும் மத்திய ஆட்சியிலும் நிறைந்திருப்பதும், பிரிவினை விரும்பிகளுக்கு உதவுகிறது.

தமிழ்நாட்டு தேசியத் தலைவர்கள் மெல்லவும்முடியாமல் விழுங்கவும் முடியாமல் மொழிப் பிரச்னையைத் தொட இயலாத படி காங்கிரஸ் மேலிடம் நடந்து கொள்கிறது. இந்த நேரத்தில் தொலைநோக்குடனும் பரஸ்பர நம்பிக்கையுடனும் விட்டுக் கொடுத்து நடந்து கொள்ளாவிட்டால் நாடு பிரிந்தே போய் விடும். இந்தச் சிந்தனையால் உந்தப்பட்டுக் கடமையாற்றும் தனித் தலைமையொன்றே இன்றைய நமது தேவை.

இங்கே போய்வந்தேன் :



# பஞ்சநத தீரத்தில் கொஞ்சும் குயிலோசை

"விபத்துக்களே! வந்து
சூழுமின்
வேண்டும் நாரணன்
திருவடி பற்றிட"

எனும் வடவர் பொன்மொழிப்படி அறநெறி துறையிலும் ஆன்மிகத் துறையிலும் ஈடுபாடு கொண்டு, சுட்ட பழமாகப் பந்தபாசம் தவிர்த்து உடலை வாழ்விக்கவேண்டி உயிர்த் தவம் செய்யாமல், உயிராசையின் துடிப்புக்களை அருள் துளிகளாக வாரி வழங்கும் இறை நெறித் தொண்டர்களை நாம் கோடி கோடியாகப் பெறவில்லை. விரல் விட்டு எண்ணிவிடும்படி ஒவ்வொருவராகத்தான் பெற்றிருக்கிறோம். அத்தகைய மகான்களில்—அவதார புருஷர்களில் — பக்தி எனும் தேனை மாந்தி வட்டமிட்டுப் பறக்கும் இசைத் தும்பியாக நாம் வாழும் இந்த நூற்றாண்டிலேயே தோன்றி வாழ்ந்து நம் நினைவலைகளில் ஒலிபரவி வரும் நாத வெள்ளமன்றோ நம் தியாகய்யா!

உப்புக்கும் புளிக்கும் ஊரூராய் அலைந்து திரிந்து பல பணி மனைகளின் படிகளில் ஏறி இறங்கிப் பல்லைக் காட்டாமல் "ராமபக்தி சாம்ராஜ்யம்" கண்டவனன்றோ என் நல்லாசான்!

"ஓராயிரம் கைகளிலே
உன்வலுவை நான் கண்டேன்
ஓடும் நதிச் சுழல் களிலே
உன் எழிலை நான் கண்டேன்
யாரேனும் மறுத் துரைத்தால்
எடுத்துரைக்கவகையறியேன்
எங்கு முனைக் காண்கின்றேன்
என்னிறைவா! ஹேராமா!"

—என்று இறையருள் வேட்பில் பரிதவிக்குமுள்ளங்கள் புகலிடம் பெறும் அருட்சுடரன்றோ நம் தியாகய்யா!

அவர் உதித்த குலம்
அவர் பிறந்த இடம்
அவர் வாழ்ந்த நாடு

அவர் புகழுடம் பெய்திய பின்னும் மணம் வீசும் பக்தி மண்டலமாயும் நிறைந்த பஞ்சநதி தீரத்துக்கு அடியேன் போய்ச் சேரும் பேறு பெற்றேன்!

—பரதேசி.

# உயர் விளைச்சல் ரகங்கள்

முதல் தடவையாக 1966-67ல், 48 லட்சம் ஏகரா நிலத்தில் மிகக் குறுகிய காலத்தில் உற்பத்தியை விரைவாக அபிவிருத்தி செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

உயர் விளைச்சல் ரக விதைகள், ரசாயன உரம் ஆகியவற்றின் உபயோகம், பாசன வசதியுள்ள இடங்களில் தீவிரச் சாகுபடி முதலியவை புதிய விவசாய திட்டத்தின் முக்கிய அம்சங்களாயிருந்தன.

இந்நடவடிக்கைகளினுல் ஏற்பட்ட நல்ல விளைவுகள் காரணமாக 1970-71க்குள் உணவு உற்பத்தி விஷயத்தில் தன்னிறைவு அடைய வேண்டுமென்று தீர்மானிக்கமுடிந்தது. 1971-க்குப் பிறகு, வெளிநாடுகளிலிருந்து உணவு தானிய உதவி கோரப்படமாட்டாது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

நெல், கோதுமை, சோளம், கம்பு போன்ற பயிர்களுக்கான உயர் விளைச்சல் ரகங்களை சீராகத் திட்டத்துடன் சாகுபடி செய்வது என்பதுதான் புதிய விவசாய அபிவிருத்தித் திட்டத்தின் அடிப்படையாகும்.

குடியானவர்களுக்கு பயிற்சியளிப்பது இத்திட்டத்தின் ஒரு பங்காக கருதப்படுகிறது.

விரைவான உற்பத்தி அதிகரிப்பதற்கான இத்திட்டத்தை 1967-68ல் மேலும் $1\frac{1}{2}$ கோடி ஏகராக்களுக்கு விஸ்தரிக்க வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இத்திட்டத்தை விவசாயிகள் உற்சாகத்துடன் வரவேற்கிறுர்கள். தேசுங் நேடிவ்-1 தைசுங்-64, தைனுன்-3, ஐ. ஆர். 8, ஏ. டி. டி-27, முதலிய விதை ரகங்களை அனேக விவசாயிகள் விருப்பத்துடன் ஏற்றுக்கொண்டிருக்கிறுர்கள்.

வறட்சியைத் தவிர்க்க பாசன வசதி என்றில்லாமல் தீவிர உற்பத்தித் திட்டத்திற்கேற்றவாறு பாசன வசதிகள் அமைக்கப்படுகின்றன. 1966-67ல், 2,45,000 கிணறுகளும், 26,000 குழாய்க் கிணறுகளும் ஏற்படுத்தப்பட்டன, சுமார் 2 2 லட்சம் பம்ப் செட்டுகள் அமைக்கப்பட்டன.

தீவிரச் சாகுபடிக்கான திட்டங்கள், 1966-67ல் விஸ்தரிக்கப்பட்டன.

விளைபொருள் உற்பத்தி அதிகரிப்பு நடவடிக்கைகளில், கிராமப் பகுதிகளிலும், நகரப் பகுதிகளிலும் கிடைக்கக்கூடிய இயற்கை உரங்களை அபிவிருத்தி செய்வது முக்கியமானதொரு நடவடிக்கையாகும். கம்போஸ்ட் உரம், பசுந்தாள் உரம் முதலியவற்றை அதிகமாக உபயோகத்துக்குக் கொண்டுவருவது நாட்டில் முக்கியமானதொரு வேலையாக இருந்து வருகிறது. சுமார் 9·6 லட்சம் டன் நைட்ரஜன் உரம் 1966-67ல் உபயோகத்திற்காகக் கிடைத்தது. இதில் உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டது 3·1 லட்சம் டன்னுகும். 1967-68-ல் நைட்ரஜன் உர உபயோகம் 13 5 லட்சம் டன்னுக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. சுமார் 3.03 லட்சம் டன் பாஸ்பேட் உரங்கள் 1966-67ல் உபயோகத்திற்குக் கிடைத்தது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. 1967-68ல் 5 லட்சம் டன் பாஸ்பேட் உரம் உபயோகப்படுத்த வேண்டும் என்பது குறியளவு.

# கம்பளி ஆடுகள் அபிவிருத்தி

ஆடு மாடு வளர்ப்பும், விவசாயமும் இந்தியாவில் ஒன்றுக்கொன்று இணைந்த தொழில்களாகும். இந்திய விவசாயிகள் தங்களுடைய குடும்பத் தேவைக்கு விவசாயத்தோடு ஆடு, மாடு வளர்ப்பில் வரும் வருவாயையும் நம்பி வாழ்பவர்களாயிருக்கிறார்கள். வெள்ளாடும், செம்மறியாடும் இறைச்சி, ரோமம், தோல் முதலியனவற்றைத் தருகின்றன. அவைதரும் ரோமம், தோல் முதலியனவற்றை நாம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து ஏராளமான அன்னியச் செலாவணியை ஈட்டிவருகிறோம்.

ஆடு, மாடுகளின் எரு முதலானவற்றை விவசாயிகள் வயலுக்கு உரமாக உபயோகிக்கிறார்கள். விவசாயத்தில் தனக்கு வேண்டிய தானியத்தை எடுத்துக் கொண்டபின் எஞ்சியிருக்கும் வைக்கோல் முதலிய பயனற்ற பொருள்களைத் தாங்கள் வளர்க்கும் கால்நடைகளுக்கு அவர்கள் அளிக்கிறார்கள். இதனால் இக்கால்நடைகளை வளர்ப்பதற்கு விவசாயிகள் தனிப்பட ஒன்றும் அதிகம் செலவிட வேண்டியதில்லை.



ஆடு, மாடுகளிலிருந்து விவசாயி பெறும் பொருள்களில் வியாபார முக்கியத்துவமுடையது ரோமமும், தோலுமாகும். இவற்றைச் கச்சாப் பொருட்களாகவும், கம்பளி விரிப்புகள், உடைகள், தோல் சாதனங்கள், மற்றும் பல உபயோகப் பொருள்களாகவும் நாம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவருகிறோம். சென்ற நிதி ஆண்டில் மட்டிலும் இப்பொருள்களின் ஏற்றுமதி மூலம் இந்தியாவுக்கு ஏறத்தாழ 81 கோடி ரூபாய் கிடைத்திருக்கிறது. இந்த வருவாயை இன்னும் பெருக்குவதற்கு நமக்கு ஏராளமான வாய்ப்புக்கள் இருக்கின்றன.

தற்போது இந்தியாவில் நாலு கோடியே இருபது லட்சம் செம்மறி ஆடுகளும், சுமார் ஆறு கோடி வெள்ளாடுகளும் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. அவற்றிலிருந்து சுமார் மூன்றரைக் கோடி கிலோகிராம் கம்பளி ரோமமும், எழுபத்தாறு லட்சம் கிலோகிராம் மயிரும், நூற்றி அறுபத்தேழு லட்சம் தோல் துண்டுகளும் கிடைக்கின்றன. இங்கு கிடைக்கும் ரோமத்திலிருந்து அறுபது கோடி ரூபாய் பெறுமான கம்பளி ஆடைகளும், கம்பளம் மற்றும் பல பொருள்களும் தயாரிக்கப்படுகின்றன. அவற்றில் இருபத்தைந்து சதவிகிதம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. நம்முடைய கம்பளி ஆடைத் தொழிற்சாலைகளுக்குத் தேவையான உயர்ந்த ரக ஆட்டு ரோமங்களை நாம் வெளிநாடுகளிலிருந்து பெரிய அளவு இறக்குமதி செய்து வருகிறோம். நம் நாட்டில் உற்பத்தியாகும் ஆட்டு ரோமங்களின் தரத்தை நாளுக்கு நாள் உயர்த்துவதன் மூலம் இந்த வெளிநாட்டு இறக்குமதியின் அளவைக் குறைத்துவிட முடியும்.

நம்முடைய நாட்டில் சராசரி மனிதனின் வாழ்க்கைத்தர நிலை முன்னையை விட உயர்ந்திருக்கிறது. அனால் உள் நாட்டில் கம்பளி ஆடை விற்பனையும் வருடந்தோறும் உயர்ந்து கொண்டே போகிறது. வளர்ந்துவரும் தேவையைப் பூரணமாக நிறைவேற்றி வெளிநாடுகளுக்கும் ரோமம் கம்பளி முதலானவற்றை நாம் ஏற்றுமதி செய்ய வேண்டுமென்றால் நம்முடைய நாட்டின் ஆட்டு ரோம உற்பத்தியை விரைவில் பெருக்கியாகவேண்டும். அடுத்த பதினைந்து, இருபது ஆண்டுகளுக்குள் சுமார் ஏழு கோடி கிலோகிராம் கம்பளி ரோமம் ஆண்டுதோறும் உற்பத்தி செய்யும் நிலையை நாம் அடைந்தால்தான் இந்த இலட்சியம் நிறைவேறும். இதற்கு நயமான ரோமமுள்ள ஆடுகளை நவீன முறைகளில் தொழில் ரீதியில் பெரிய அளவில் வளர்க்க எல்லா முயற்சிகளையும் தொடங்குவது இன்றியமையாததாகிறது.

இந்தியாவில் உயர்ந்த ரக ரோமம் தருகின்ற செம்மறி ஆடுகள் அதிகமாக இல்லை. உயர்ந்த ஜாதி ஆடுகளை உற்பத்தி செய்வதற்கு ஒவ்வொரு குட்டியின் பிறப்பு, வளர்ப்பு, ஜாதி முதலியவற்றைப் பதிவு செய்து வைக்கும் முறையும் இந்தியாவில் வழக்கத்தில்லை. செம்மறிச் சிடேரிகளை வைத்திருப்பவர்கள் காலத்தோடு ரோமத்தைச் சேகரியாமல் நாட்பட விட்டு விடுகிறார்கள். இப்படிச் செய்வதால் ஆட்டுமந்தையில் கிடைக்கும் ரோமத்தின் மொத்த உற்பத்தி குறைந்து விடுகிறது. லாபகரமாயில்லாத ஜாதிகளை வளர்ப்பதை நிறுத்திவிட்டு நல்ல ஜாதிகளை மட்டும் வளர்ப்பதனாலும், ரோமத்தைக் காலத்தோடு சேகரிப்பதனாலும் உற்பத்தியை இன்றுள்ளதைவிட 15 முதல் 20 சதவிகிதம் உயர்த்திவிட முடியும். தற்போது இந்தியாவிலுள்ள ஆடுகள் ஓராண்டில் சராசரி 9 கிலோகிராம் ரோமம் தருவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு விவசாயியும் தன்னிடமுள்ள ஆட்டுமந்தையில் எந்த ஆடு எவ்வளவு ரோமம் தந்ததென்று நிறுவையிட்டுக் கணக்கு வைத்தால் நல்ல ஜாதி ஆடுகள் யாதென நிதானித்துவிட முடியும். இப்படித் தெரிந்தெடுத்த ஆடுகளை இனவிருத்தி செய்து கொண்டுபோனால் ரோம உற்பத்தி பெருகும்.

நம் நாட்டில் மிகவும் நுண்ணியதான கம்பளி ஆடைகள் நெய்வதற்கேற்ற ரோமம் அதிகமாகக்கிடைப்பதில்லை. அதனால் வெளிநாடுகளிலிருந்து பெரும் பொருள் கொடுத்து அவற்றை இறக்குமதிசெய்து வருகிறோம். இதனால் நம்மிடமுள்ள வெளிநாட்டுச் செலாவணி வீணாகி விடுகிறது. இச்செலவைக்குறைக்க வேண்டுமென்றால் அதிக உற்பத்தியென்ற லட்சியத்தோடு நயமான ரோமம் என்ற கண்ணோட்டத்தையும் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்தியாவில் ஆடு வளர்ப்பு பெருப்பாலும் கல்வியறிவில்லாதவர்கள் கையில் விடப்பட்டிருக்கிறது. போதிய பொதுஅறிவும், நல்ல வசதிகளும் படைத்த மக்கள் ஆடு வளர்ப்பில் கவனம்செலுத்தி ஆடுவளர்ப்புப் பண்ணைகளைத் தொடங்குவது விரும்பத்தக்கதாகும். வெளிநாடுகளிலிருந்து தருவிக்கப்பெற்ற உயர்ந்தஜாதி ஆடுகளை உள்நாட்டு ஆடுகளுடன் கலக்கிவிட்டுக் கலப்பின ஆடுகளை விருத்தி

செய்யலாம். ஆடுகளுக்கு வரும் நோய்களைக் கட்டுப்படுத்தத் தக்க நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதும் முக்கியமாகும். ஒரு சில நோய்களுக்கு முன்னெச்சரிக்கையான தடுப்பு நடவடிக்கைகளோ, வந்தபின் குணப்படுத்தும் மருந்துகளோ இல்லாமல் இருக்கிறது.

இந்தக் குறையை நீக்கத் தீவிரமான ஆராய்ச்சிகளை நடத்தவேண்டியதும் அவசியமாகும். ஆடு வளர்ப்போர்களது சக்திக்குள்ளிட்ட செலவில் மருந்துகளும், தடுப்புமுறைகளும் இருக்க வேண்டும். இந்தியாவில் பெரும்பாலானோர், ஆட்டு மந்தைகளை அநேகமாக ஒரே இடத்தில் வைத்து வளர்ப்பதில்லை. எங்கெங்கு புல்வெளி இருக்கின்றனவோ அங்கெல்லாம் ஆடுகளை ஓட்டிச்சென்று விரும்பிய இடத்தில்கிடைபோட்டு வளர்க்கும் முறைதான் இங்கு அதிகமாக இருக்கிறது.

எனவே அரசாங்கம் இவர்களுக்கு உதவிசெய்ய நினைத்தாலும் ஆட்டிடையர்கள் செல்லுமிடமெல்லாம் உதவியை அனுப்பிக் கொண்டிருக்க முடியாது. கால்நடை மருத்துவமனைகளை மிகப்பல இடங்களில் பரவலாக அமைத்தாலன்றி ஆட்டிடையர்களுக்கு ஆடு வளர்ப்பில் உதவிகள் செய்யவழியில்லை.

ஆட்டுக்கு வரும் ஒருவித செள் பூச்சி காசரணமாக ரோம உற்பத்தி குறைந்துவிடுகிறது. இந்தச் செள்ளை ஒழித்துவிட்டால் ஒவ்வொரு ஆடும் அதிகமான எடையுள்ள ரோமத்தைக் கருமென்று பரிசோதனைகளின் மூலம் கண்டறியப்பட்டிருக்கிறது.

செள்ளால் பீடிக்கப்படாத ஆட்டின் எடையும் கூடுகிறது. சிலபூச்சிகொல்லி மருந்துகளைத் திரவ ரூபத்தில் ஆட்டின் மீது தெளித்து வந்தால் ரோமங்களிலுள்ள செள், பேன், உன்னி முதலானவைகள் அழிந்து போகும். அதனால் ரோமத்தின் தரமும், உற்பத்தி அளவும் கூடும். உண்ணியால் ஆடுகளுக்கு ஏற்படுகின்ற ஒருவித நோயையும் இதனால் தடுத்துவிடலாம்.

ஆடுகளிலிருந்து ரோமத்தை வெட்டியெடுப்பதற்கு நம் நாட்டில் முரட்டு ரகக் கத்தரிக்கோலையும், பிற கருவிகளையும் பயன்படுத்துகிறார்கள். இதனால் பல சீர்கேடுகள் உண்டாகின்றன. ரோமம் கெடாமலும் அதே சமயம் ஆடுகள் தரும் உற்பத்தி குறையாமலும் இருக்கவேண்டுமென்றால் தற்போது உண்டாக்கப்பட்டுள்ள திருந்திய ரக கத்தரிக்கோல் முதலியவற்றைப் பயன்படுத்தி ரோமத்தைக் கத்தரிக்கவேண்டும். புதிய முறைகளைக் கடைப்பிடித்தால் நீளம் அதிகமுள்ளதும், நயமானதுமான ரோமம் அதிகம் கிடைக்கும்.

பெல்லாரி மாவட்டத்தில் இது குறித்து நடத்திய பரிசோதனைகளிலிருந்து புதிய இயந்திர கத்தரிக்கோல்கொண்டு ரோமம் வெட்டும்போது ஆடு ஒன்றுக்குக் கால் ராத்தல் ரோமம் அதிகமாகக் கிடைப்பதாகக் கண்டறியப்பட்டது. எனவே இந்த எந்திரக் கத்தரியை எல்லா இடங்களிலும் உபயோகிக்கத் தொடங்கினால் நாட்டின் மொத்த உற்பத்தியில் சுமார் 15 சதவிகிதம் ஒவ்வொரு ஆண்டும் அதிகமாகக் கூடும்.

வெள்ளை நிறமுள்ள ரோமத்திற்கு உலகச் சந்தையில் இதர ரோமங்களைவிட 50 சதவிகிதம் அதிக விலை கிடைக்கிறது. நமது நாட்டின் தென்பகுதியில் வளர்க்கப்படும் ஆடுகளின் நிறம் கறுப்பு அல்லது பழுப்பு நிறமாக இருக்கிறது. இப்பகுதியில் வெள்ளை நிறச் செம்மறி ஆடுகள் வளர்ப்பினை உற்சாகப்படுத்த வேண்டும். வெள்ளை நிறக் கடாக்களைத் தென்னிந்தியாவிலுள்ள கிடேரிகளுடன் பிணையவிட்டால் அவைகள் வெள்ளை நிறக் குட்டிகளைப் போடும். நம் நாட்டில் கிடைக்கும் தோலிலும் பலவித அபிவிருத்தி காண வேண்டியிருக்கிறது. சாதாரணமாக வயதான அல்லது நோயுற்ற ஆடுகளிலிருந்து கிடைக்கும் தோல் உயர்ந்த தரமாக இருப்பதில்லை. தோல் சேகரிப்பிற்கும் தரமான ஆடுகளைத் தேர்ந்தெடுத்து வளர்க்கவேண்டும். ஒட்டுண்ணி, செள் முதலியவைகள் ஆட்டின் தோலைக் கடித்துக்கொண்டு வளரும் தன்மையுடைய உயிர்களாகும். இவ்வுயிர்களை ஆட்டின்மீது வளரும்படி விட்டால் தோலின் தரம் கெட்டுப்போகும். எனவே இவற்றை ஒழிப்பதற்கான காப்புமுறைகளை ஆட்டு மந்தை வளர்ப்போர் அறிந்து கடைப்பிடிக்க வேண்டும்.

ஆடுகளைமேயவிடுவதற்கு நல்ல மேய்ச்சல் நிலங்களும், புதரும்வேண்டும். புதரில் முள் செடிகளிருந்தால் அவற்றை வெட்டி அகற்றிவிடவேண்டும். அப்படி அகற்றுவிட்டால் செடியின் முட்கள் ஆட்டின் தோலில் குத்தித் தோலின் தரத்தை குறைத்துவிடக் கூடும். தோலைப் பதப்படுத்துவதிலும் பல திருந்திய முறைகள் இருக்கின்றன. அவற்றின் நுணுக்கங்களைத் தெரிந்து திறமையாகப் பதப்படுத்தினால் உயர்ந்த ரகமான தோலைப் பெறலாம். மேற்சொன்ன அனைத்தையும் ஆட்டுமந்தை வளர்ப்போர்கள் மனதில் வைத்து உயர்ந்த ஜாதி ஆடுகளை நிறையப் பெருக்கி மிருதுவான ரோமம், தரமான தோல், நல்ல இறைச்சி இவற்றின் உற்பத்தியைச் சிறக்கச் செய்தால் நாடும், மக்களும் நலம் பெறலாம்.

---

### அரியலூர் டி. மு. கோ.

O. S. 1126/67

கல்லியாணி ஆச்சி —வாதி

பெரியதம்பி படையாச்சி மகன் விளாங்குடி துரைசாமி படையாச்சி —பிரதிவாதி

வாதிபேருக்கு பிரதிவாதியால் ரு. 1266-25க்கு 19—10—64இல் ஏற்பட்ட Pronoteபடி அசல் வட்டி பாக்கி ரு. 1503-66 கிடைக்க தரப்பட்டுள்ள தாவா 16—2—68 காலை 10 மணிக்கு வைக்கப்பட்டு இருக்கிறது என்று தெவிக்கப்படுகிறது.

B. வெங்கடாசலம் பிள்ளை
1/7683/96 அட்வகேட்.

---

### திண்டிவனம் டி. கோ.

S. C. 998/67

நடேச முதலியார் —வாதி

செஞ்சிதாலுக்கா தாதங்குப்பம் கிராமத்திலிருக்கும் மொட்டைய கவுண்டர் பாரியாள் வள்ளியம்மாள் -1. ஷெயாள் குமாரர் பொன்னு சாமிகவுண்டர்-2. —பிரதிவாதிகள்

வாதி உங்கள்பேரில் தாவா பிராம்சரி நோட்டுபடி சேரவேண்டிய ரு. 399-35க்கும் சிலவுக்கும் செய்திருக்கும்ஷெதாவாவானது 6-2-68ல் ஈரங்கி. ஆட்சேபணை இருந்தால் அன்று காலை 10-30 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ள தவறினால் exparte ஆக தீர்ப்பு செய்யப்படும்.

T. K. சுப்ரமணியசர்ம…
2/7684/97 அட்வகேட்

---

### சிதம்பரம் டி. மு. கோ.

S. C. 769/58

A. V. முருகேசம்பிள்ளை —வாதி

சீதாராமய்யர் —பிரதிவாதி

ஷெ இல் ஜப்தி சொத்துக்களின் இஷ்தியாரின் ஷரத்துக்களை நிர்ணயம் செய்ய 5—2—68ல் பகல் 11 மணிக்கு ஈரங்கி வைக்கப்பட்டிருப்பதால் ஷெ தேதியில் தங்கள் ஆட்சேபணைகளை தெரிவித்துக் கொள்ளாவிட்டால் எக்ஸ்பார்ட்டியாக முடிவு செய்யப்படும்.

K. குஞ்சிதபாத அய்யர்
3/7685/98 அட்வகேட்.

---

### திண்டிவனம் டி. மு. கோ.

S. C. 981/67

Lakshmi Saraswathi Provision stores by Prop. A. T. Vittoba chethiar Bazaarstreet Tindivanam —வாதி

S. S. Basheer & Bros. Sago Merchants. 14, Thoddu chandra Iyer street Shevvaipet, SALEM-2. —பிரதிவாதி

வாதியுடன் பிரதிவாதி 25—3—67ந் தேதியில் செய்துக்கொண்ட ஒப்பந்தப்படி 5மூட்டை ஜவ்வரிசிகொடுக்காத காரணத்தினால் வாதிக்குச்சேரவேண்டிய நஷ்டத்துகை ரு 180யும் அதற்குண்டான பின்வட்டியுடன் பிரதிவாதியிடமிருந்து வரப்பற்ற வாதி செய்திருக்கும் இந்தத்தாவா 8—2—68ல் ஈரங்கி குறிக்கப்பட்டிருக்கிறது. பிரதிவாதி அன்று ஆஜராகாத பட்சத்தில் ஒருதலை பட்சமாக டிக்ரி செய்யப்படும் என்று அறியவும்.

V. சுப்ரமணியம்
4/7686/99 அட்வகேட்








[ 2-ம் பக்கத் தொடர்ச்சி ]

சிகரெட், மின்சார, இயந்திர· பொதுஎஞ்சினியரிங்சாமான்கள், இரும்பு-உருக்கு, காகிதம், ஜவுளி ஆகிய உற்பத்தித் துறைகளில் உள்ள ஊழியர்களுக்காக தொழிலாளர்களுக்கான பிராவிடெண்ட் நிதிச் சட்டம் கொண்டு வரப்பட்டது. தற்போது இச்சட்டத்தின் வரம்பிற்குள் 112 தொழில்துறைகளைச்சேர்ந்த 40,266 நிறுவனங்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. இதன்படி பிராவிடென்ட் நிதிக்கு கட்டணம் செலுத்தும் நபர்களின் எண்ணிக்கை 50 லட்சமாகும்.

வேலைவாய்ப்பு கிடைக்காத தொழில்துறை ஊழியர்களுக்கு உதவியளிப்பதற்கான திட்டம் ஒன்று பரிசீலனையில் இருக்கிறது. தொழிலதிபர்கள், ஊழியர்களை வேலையிலிருந்து நீக்குவதற்கு ஊக்கம் தராமல் இருப்பதற்காக, வேலையிலிருந்து நீக்கப்படும் ஊழியருக்கு, ஒரு ஆண்டு சேவைக்கு 15 நாள்சம்பளம் என்ற விகிதத்தில் நஷ்டஈடு அளிக்க வேண்டும் என்று தொழில் துறை தகராறுகள் சம்பந்தமான 1947-ஆம்வருடத்திய சட்டம் விதித்திருக்கிறது.

ரெயில்வே ஊழியர்கள், அரசாங்க ஊழியர்கள் தவிர மற்ற எவருக்கும் பென்ஷன் வசதிகள் கிடையாது. ஆனால் தொழிலாளர்களுக்கான பிராவிடெண்ட் நிதிச் சட்டத்தின் மூலமும், நிலக்கரித் தொழிலாளர்களுக்கான பிராவிடெண்ட் நிதி,— போனஸ் திட்டம் மூலமும், ஓய்வுபெறும் தொழிலாளர்களுக்குபிராவிடெண்ட் நிதித் தொகை கிடைக்கிறது.

முதியவயதை அடைந்து, வேலை செய்ய முடியாமல் இருக்கும் பிரஜைகளுக்காக சில ராஜ்ய அரசாங்கங்கள் முதியோர் பென்ஷன் திட்டத்தைவகுத்திருக்கின்றன. இத்திட்டம், உத்தர் பிரதேஷ், கேரளம், தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேஷ், பஞ்சாப், ராஜஸ்தான், மேற்கு வங்காளம் ஆகிய ராஜ்யங்களில் அமலில் இருக்கிறது. வேலை செய்ய முடியாமல் இருக்கும் முதிர்ந்த பிரஜைகளுக்காக பஞ்சாப் அரசாங்கம் விடுதிகளை அமைத்திருக்கிறது.

உடல் ஊனமடைந்தவர்களுக்கும், முதியோர்களுக்கும் உதவி அளிப்பதற்கான திட்டம் ஒன்றை சோதனை முயற்சியாக மேற்கொள்ளுமாறு மத்திய அரசாங்கம், ராஜ்ய அரசாங்கங்களுக்கு சிற்றறிக்கை ஒன்றை அனுப்பியிருக்கிறது. இந்த திட்டப்படி சோதனை முயற்சிகளை மேற்கொள்ள பல ராஜ்ய அரசாங்கங்கள் முன்வந்திருக்கின்றன.

தொழிலாளர்களுக்கான அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தை மதிப்பீடுசெய்த கமிட்டியொன்று, இத்திட்டத்தை அபிவிருத்தி செய்வதற்காக சில முக்கியமான சிபாரிசுகளைச் செய்திருக்கிறது. வருமான இழப்பு, சம்பள இழப்பு முதலியவற்றிலிருந்து தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிப்பதற்காக ஒருங்கிணைப்பான திட்டம் ஒன்றைஏற்படுத்துவது அவசியமாகும் என்று மதிப்பீடு கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. முதல் நடவடிக்கையாகதொழிலாளர்களுக்கான அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தையும், தொழிலாளருக்கான பிராவிடென்ட் நிதித் திட்டத்தையும் இணைக்கலாம் என்றுகமிட்டி சிபாரிசுசெய்திருக்கிறது. தொழிலாளர் நலம் பற்றிய நிரந்தரக் கமிட்டியும் இந்த யோசனையை வரவேற்றிருக்கிறது. அரசாங்கம் இவ்விஷயத்தை தற்போது பரிசீலனை செய்து வருகிறது.

சிறிய நிறுவனங்களில் உள்ள ஊழியர்கள், விவசாயத்தொழிலாளர்கள், சொந்தமாக வேலையில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகள், கடை வைத்திருப்பவர்கள் ஆகியோர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கவேண்டியதும் கவனிக்கப்பட வேண்டிய மற்றொரு முக்கிய பிரச்னையாகும்.

பிராவிடென்ட் நிதியிலிருந்து ஒரு தொகையை ஒதுக்கி, ஊழியர்களுக்கு பென்ஷன் அளிப்பதோ அல்லது அவர்களுடைய குடும்பத்தினருக்கு பென்ஷன் அளிப்பதோ முடியுமா என்பதைப் பற்றி பரிசீலனை செய்ய அரசாங்கம் ஒரு ஆய்வுக்குழுவை அமைத்திருக்கிறது. இந்த ஆய்வுக்குழு கூடியசீக்கிரம் அதன் அறிக்கையைச் சமர்ப்பிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தியாவில் மேற்கொள்ளவேண்டியிருக்கும் சமூக நல பாதுகாப்புநடவடிக்கைகளுக்கு, முன்னேற்றம் அடைந்துள்ள பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளில் உள்ள சமூக நலப் பாதுகாப்பு திட்டங்கள் உதவியாக இருக்கக்கூடுமே அல்லாது, மேல்நாடுகளில்உள்ள வசதிகளை நோக்கில் கொண்டு இந்திய திட்டங்களை மதிப்பிட முடியாது. இந்தியாவில் ஆற்றவேண்டியிருக்கும் பணியை நோக்கில், இதுவரை அடையப்பட்டுள்ள சாதனை உற்சாகமூட்டுவதாகவே இருக்கிறது.

வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற வசதிகள், வேலைக்குத் தகுந்த சம்பளம், நல்ல வேலை நிலைமை, ஓய்வு நேரத்தை அனுபவிப்பதற்கான வாய்ப்புகள் ஆகியவற்றை எல்லா ஆண்களும் பெண்களும் உரிமையுடன் பெறவேண்டும் என்பதே நம்முடைய இறுதியான குறிக்கோளாகும்.

நாடு முழுவதிலும் உள்ள மக்களின் நலத்தைப்பேணுவதே இந்தியாவின் ஆக்கரீதியான பணிகளின் அடிப்படையாக இருந்து வருகிறது.

Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.